உ

கடவுள் துணை

# சேந்தன் திவாகரம்

முதலாவது

(தெய்வப் பெயர்த் தொகுதி)

பதிப்பாசிரியர் :

சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழாசிரியர்
மணி. திருநாவுக்கரசு முதலியார் அவர்கள்

வெளியிடுவோர் :

வாவிள்ள
இராமசாமி சாஸ்த்ருலு அண்ட் ஸன்ஸ்,
292, எஸ்பிளனேட், சென்னை.

 [பிரபவ சித்திரை

கடவுள் துணை

# நூன்முகம்

'சேந்தன் திவாகரம்' என்னும் இந்நூல் திவாகர முனிவரால் இயற்றப்பட்டது; திவாகரர் சிறந்த தமிழ்ப் புலவர்; பன்னிரண்டு தொகுதிகளையுடைய இந்நூலைத் தம்பெயருடன் சேந்தன் என்னும் அரசன் பெயரையும் சேர்த்துச் சேந்தன் திவாகரம் எனக் குறியிட்டு முடித்துள்ளார்; செங்கதிர் வரத்தாற்றோன்றும் திவாகரர் என மண்டல புருடன் நிகண்டு கூறுதலின் இவர் திவாகரர் எனப் பெயரிடப் பட்டனர். இதுகொண்டு இவர் சூரிய குலத்து மன்னர் மரபினராகலாம் எனவும் ஊகிப்பர். தமிழ் மொழியின் கண்ணுள்ள நிகண்டுகளில் இதுவே காலத்தான் முற்பட்டது. இது கடைச்சங்க காலத்தே தோற்றியது; இந்நூல் செய்வித்தோன் சோழ நாட்டின்கண் காவிரியாற்றின் மருங்கிலேயுள்ள அம்பர் என்னும் நகரையாண்ட அருவந்தை சேந்தன் என்னும் மன்னவன். இவன் வடமொழி தென்மொழி என்னும் இருமொழிகளிலும் வல்லவன் என்பதும் பெருங்கொடையாளி என்பதும் திவாகரத்தின் கண் ஒவ்வொரு தொகுதியின் இறுதியிலும் வரும் கட்டுரைகளால் விளங்கும். கடைச் சங்கப்புலவருள் ஒருவராகிய கல்லாடனார் இவனைப் பற்றிப் பாடிய புறநானூற்றுச் செய்யுளில் இவன் அருங்கொடைத்திறம் பின்வருமாறு பாடப்பட்டுள்ளது; 'எனனைர நீலத்தின் சிதார் களைந்து, வெளிதுமடீஇ என் பசிகளைந்தோனே காவிரிகிளையுந் தாழ் நீர்ப்படப்பை நெல்விளை கழனி அம்பர் கிழவோன் நல்லருவிந்தை'

அன்றியும் இவன் சம்பாபதி என வழங்கும் புகார்த் தெய்வத்திற்கு ஓர் அந்தாதியும் இராமபிரான் கோதண்டம், அருச்சுனன் காண்டீபம், முருகவேள் வேற்படை முதலியவற்றைக் குறித்துப் புகழ்ப்பாடல்களும் இயற்றினதாகப் பின்வரும் திவாகர அடிகளால் புலப்படுகின்றன.

'அண்ணல் சம்பாதிக் காணி யாட்டியை
பெண்ணணங்கை மூவுலகும் பெற்ற அம்மையைச்
செந்தமிழ் மாலை அந்தாதி புனைந்த
நாவலன் அம்பர் காவலன் சேந்தன்'

'அரக்கரைப் பொருத முரட்போர் வில்லும்
பாரதம் பொருத பேரிசைச் சிலையும்
தாருகற் கடிந்த வீரத் தயிலும்
பாடிய புலவன் பதியம்பர் சேந்தன்'

இனி இவன் குறும்பாசனை வென்று அறவழி நின்று செங்கோல் செலுத்தி ஐம்புலனை அடக்கி வாழ்ந்தவன் என்பதும் பின்வருவனவற்றால் அறியலாகும் :

'மறக்குறும் போட்டி அறத்தின் வழிநின்று
கவிகைத் தண்ணளி புவிபெற ஆணையின்
ஐம்புலனும் அம்பர் கோமான்'

அம்பர் என்பது அம்பல் எனச் சில பிரதிகளில் காணப்படுகின்றது; அம்பல் என்பது சோழ நாட்டின் கண்ணதாகிய வேறோர் ஊர் என்றும் உரைப்பர்.

இந்நூலின் முதற்பகுதி எல்லாப் பள்ளிகளிலும் வழிவழிப்படிக்கப்பட்டு வருதலின் இதனை அச்சிட்டோம்.

இங்ஙனம் :

மணி. திருநாவுக்கரசு முதலியார்.

உ

கடவுள் துணை

# சேந்தன் திவாகரம்

## தெய்வப்பெயர்த்தொகுதி

### மூலம்

காப்பு

தந்திமுகத் தெந்தை சதங்கைப் பதம்போற்றிச்
சிந்தை விளக்காந் திவாகரத்துள்—வந்த
தொகுதியொரு பன்னிரண்டுஞ் சோராம னேரே
பகுதியுற மனமே பற்று.

சிவன்

௧

சங்கரன், இறையோன் நக்கன், சடையோன்
காமதகனன் நாரிபாகன்
கங்காதரனே முக்கட்பகவன்
கறைமிடற்றண்ணல் பசுபதி, பாமன்
கூற்றையுதைத்தோன் கொன்றைசூடி
குன்றவில்லி கொலைமழுவாளி
ஏற்றுவாகனன் ஈமத்தாடி
திரியம்பகன், சோதி பிஞ்சகன், பித்தன்

ஆனையுரித்தோன்
அரன், சிவன், உருத்திரன்
காலகாலன்
கபாலமூர்த்தி
நீலகண்டன்
நீறணிகடவுள்
அரவாபரணன்
ஆரழலாடி
பிறையதுசூடி
பெருமான், உமாபதி
அழலதுவேந்தி
அமலன், ஆநந்தன்
பரசுபாணி
சுடலையாடி
மானிடமேந்தி
மறைமுதல், யோகி
புலித்தோலுடையோன்

புரமூன்றெரித்தோன்
பினாகபாணி
பேயோடாடி
பூதநாதன்
புணர்கங்காளன்
ஞானமூர்த்தி
ஈசன், அநாதி
ஐம்முகன், பகவன்
ஆதி, பாண்டரங்கன்
அந்திவண்ணன்
ஆலமர்கடவுள்
நந்திநம்பன்
நாதன், தற்பரன்
கண்ணுதன்மூர்த்தி
கைலையாளியென்று
எண்ணியநாமம்
இன்னமும்பலவே.

## திருமால்

மாயோன், மாதவன்
நாரணன், கேசவன்
சீதரன், திருமகன்
பூமிகொழுநன்
விண்டு, விறலரி
திரிவிக்கிரமன்
உந்திபூத்தோன்
உவணமுயர்த்தோன்
வாமனன், கண்ணன்

கோவிந்தன், அச்சுதன்
ஆழ்கடற்றுயின்றோன்
அரவணைச்செல்வன்
சக்கராயுதனே
சங்கமேந்தி
கருங்கடல்வண்ணன்
கமலக்கண்ணன்
சாரங்கபாணி
தருபஞ்சாயுதன்

உலகமுண்டோன்
உலகினையளந்தோன்
நாரசிங்கன்
ஆதிவராகன்
பதுமநாபன்
மதுசூதனனொடு
தாமோதரனே
தருபீதாம்பரன்
காவற்கடவுள்
முராரி, முகுந்தன்
பெருமான், பிரமன்
தந்தையென்றிவைமுதல்
திருமாற்கனந்தம்
சிறந்தசொல்பெயரே.

## பிரமன்

உந்தியிலுதித்தோன்
ஒளிமலர்மிசையோன்
அன்னவூர்தி
அன்னமுயர்த்தோன்
நான்முகன், மான்மகன்
நலங்கேழ், எண்கணன்
வானவர்முதல்வன்
மண்பொதுத்தந்தை
இறைவன், குரவன்
மறையோன், விரிஞ்சன்
அந்தணன், ஞானன்
அயன், வரன், திசைமுகன்
பிதாமகன், விதாதா
கமலயோனி
வேதாப்போதன்
விதிபரமேட்டி
இரணியகருப்பன்
படைப்போன்இவைமுதல்
அரணியல்பிரமற்கு
அனந்தம்பெயரே.

## இந்திரன்

புரந்தரன், புனிதன்
பொன்னகர்க்கிறைவன்
வாசவன், அமரர்கோன்
மான்முகிலூர்தி
வேள்விநாயகன்
விண்முழுதாளி
ஆயிரங்கண்ணன்
அயிராணிகேள்வன்
மருத்துவன், மாவான்
வலாரி, விருத்திராரி
வெள்ளைவாரணன்
இமையவர்வேந்தன்
பாகசாதனன்
ஆகண்டலனே

வச்சிரபாணி
சதக்கிருவென்றிவை
எச்சமிலிந்திரற்கு
இயன்றதொல்பெயரே.

## கணபதி

ஒற்றைக்கொம்பன்
விநாயகன், ஐங்கரன்
வெற்றியானை
முகவன், கணபதி
பாசாங்குசதரன்
ஆகுவாகனனே.

## முருகன்

முருகன், சூர்ப்பகை
செட்டிகுமரன்
அறுமீன்காதலன்
சேவலங்கொடியோன்
கார்த்திகேயன்
கடம்பன்சுவாமி
வேலுடைக்கடவுள்
மேலவர்க்கிறைவன்
வரைபகவெறிந்தோன்
வள்ளிமணாளன்
அரன்மகன், குறிஞ்சிமன்
சரவணத்துதித்தோன்
அறுமுகன், விசாகன்
குகன்சேய், செய்வேள்
தேவர்சேனாதிபதி
மயிலாளி, சேந்தன்
கந்தன், காங்கேயன்
வேளெனச்செப்புவர்.

## காமன்

வேனிலாளி
வேண்மதன், அனங்கன்
மாரன், பூவாளி
மன்மதன், கந்தர்ப்பன்
பஞ்சபாணன்
கருப்புவில்லி
இரதிகாதலன்
மகரமுயர்த்தோன்
திருமால்புதல்வன்
வசந்தனென்றிவை
வருமால்காமற்கு
இயன்றவன்பெயரே.

## வைரவன்

வைரவன், காரி
வடுகக்கடவுள்.

### ஐயனார்

கோழிக்கொடியோன்
சாதவாகனன்
காரி, சாத்தன்
கடனிறவையன்.

### வச்சிரவண்ணன்

மந்திரி, குபேரன்
நிதிக்கோன், இயக்கன்
பிங்கலனைற்குப்
பிரியாத்தோழன்
வடதிசைத்தலைவன்
இயக்கர்வேந்தன்
அளகையாளி
ஆய்முற்காவலன்
புட்பகவூர்தி
தனதன், மாக்தனென
வைப்பர்நாமம்
வச்சிரவணற்கே.

### அருகன்

அருகன், அசலன்
அதிகுணன், அபயன்
அமையவன், அறிவன்
அதிசயன், அமலன்
பூரணன், புங்கவன்
புணர்முக்குடையோன்
அசோகுடைச்செல்வன்
அண்ணறத்துவன்
ஆதியங்கடவுள்
அறவாழியந்தணன்
அரியணைச்செல்வன்
அருளாழிவேந்தன்
பண்ணவன், பகவன்
எண்குணன், மாசேனன்
விண்ணவன், தேவன்
விறலோன், விளங்கொளி
பொன்னெயினாதன்
பூமிசைநடந்தோன்
முனைவன், வீரன்
முதல்வன், புனிதன்
காமற்காய்ந்தோன்
கமலவூர்தி
சிநேந்திரன், திகம்பரன்
சாந்தன், புண்ணியன்
மூர்த்தி, ஆசான்
முழுதொருங்குணர்ந்தோன்
வரதன், சினவரன்
என்றிவைமுதலா
அருகற்கினும்
அனந்தம்பெயரே.

## புத்தன்

அண்ணல், வாமன்
அருங்கலைநாயகன்
புண்ணியமுதல்வன்
ஆதிபுங்கவன்
பாயுள்மிசையோன்
சார்ந்தன், புனிதன்
பகவன், சைனன்
அறவன், மூர்த்தி
போதி, வேந்தன்
சினன்வரன், புத்தன்
ஏகதேவன்
முக்குற்றங்கடிந்தோன்
அருணெறிசுரக்கும்
செல்வன் அனந்த
லோசனன்வளர்ந்த
பூமிசைநடந்தோன்
அகளங்கன், முத்தன்
புண்ணியமூர்த்தி
பஞ்சதாரைவிட்டு
அவுணர்கூட்டிய
எஞ்சலில்பெருமாற்கு
இன்னவும்பலவே.

## நமன்

அந்தகன், தருமன்
தென்றிசைமுதல்வன்
சண்டன், மறலி
கூற்றுச், சமன், ஞமன்
செங்கோற்கடவுள்
இயமனென்றிவை
தங்கியநமன்மேல்
தரும்பெயராகும்.

## காலன்

சண்டனும், மறலியும்
கூற்றுச், சவனுமென்று
இந்தவகைப்பேர்
காலற்குமாகும்.

## உமையவள்

காமக்கோட்டி
அம்பிகை, கௌரி
ஆரியை, சத்தி
அயிராணி, பார்வதி
இமயவல்லி
உமையவள்பேரே.

கங்கை

பகிரதி,சானவி
வராநதி,சுராநதி
திரிபதகை,மந்தா
கினியிவைகங்கை.

காடுகோள்

காடுகாள்,மோடி
காரிதாய்,கொற்றி
மாரி,சூரி
வடுகி,முதணங்கே.

திருமகள்

பொறிமா,ஆக்கம்
செல்வி,பொன்,பூமகள்
செய்யாள்,இந்திரை
திருமகள்பெயரே
கமலை,பதுமை
விமலை,கோகனகை
அனையவுமவள்பெயர்
ஆகுமென்ப.

சரஸ்வதி

பாரதி,வாணி
பனுவலாட்டி
வெண்டாமரையாள்
வெள்ளைமேனியாள்
நான்முகன்கிழத்தி
நாமகள்,கலைமகள்
உலகமாதா
ஊர்பூரவாகனி
ஞானமூர்த்தி
நற்பாமடந்தை
சாவித்திரியே
காயத்திரியென
வாக்கின்செல்வியை
நோக்கியபெயரே.

சேட்டை

முகடி,தௌவை
கலதி,மூதேவி
காக்கைக்கொடியாள்
கழுதைவாகனி
கேட்டை,கெடலணங்கு
சேட்டைப்பெயரே.

இந்திராணி

சுந்தரி,சசியே
அயிராணி,புலோமிசை
இந்திரன்,தேவிக்கு
எய்தும்பெயரே.

காளி

சூலி, எண்டோளி
தாருகவிநாசனி
மாதரி, வீரி
கௌரி, முக்கண்ணி

பைரவி, குமாரி
சாமுண்டி, சண்டிகை
யோகினி, வேதாளி
யாமளை, மாகாளி.

பகவதி

கொற்றவை, ஐயை
கார்த்திகை, கௌரி
துர்க்கை, சூலி
மகிடற்காய்ந்தாள்
நீலி, எண்டோளி
விந்தை, சயமகள்
இருங்கலையூர்தி
எழிலரியேறி
மேதித்தலைமிசை

விசயை, அந்தரி
மாலுக்கிளையாள்
சக்கராயுதியே
பாலைக்கிழத்தி
பண்ணம், பணத்தி
நாராயணியே
கன்னி, குமரி
சீர்சால்பகவதி
சிறந்ததொல்பெயரே.

இடாகினி

வஞ்சனி, மாயவள்
வலவையிடாகினி.

யோகினி

சன்மினி, சூர்மகள்
யோகினியாகும்.

அமரர்மாதர்

அரம்பையர், அரமகளிர்
அமரர்மாதர்.

தெய்வப்பெண் பொது

அணங்கும், சூரும்
தெய்வப்பெண்பொதுப்பெயர்.

## தேவர்கள் பொது

வானவர், இமையவர்
விண்ணவர், கடவுளர்
அமரர், சுரர், புலவர்
அண்டர், புத்தேளிர்
ஐயர், உம்பர்
தேவர்கள்பொதுப்பெயர்
பண்ணவர், பகவர்
தீர்த்தர், பட்டாரகர்
புங்கவரெனவும்
கடவுளர்பொதுப்பெயர்.

## அசுரர்

தானவர், அவுணர்
தகுவர், தைத்தியரென்று
இனையநான்கும்
நிசாசரரும், அசுரர்.

## மாவலி

வைரோசனனே
மாவலி, அவுணன்.

## இராக்கதர்

அரக்கர், இராக்கதர்
நிசாசரர் நிருதரென்று
உரைத்தநான்கும்
ஒன்றன்பால
சாலகடங்கடரும்
பிசிதாசனரும்
யாதுதானவரும்
அவ்வினத்தவரே.

## வித்தியாதரர்

விஞ்ஞையர், கேசரர்
வித்தியாதரர்பெயர்.

## கந்திருவர்

தந்திரர், கின்னரர்
வீணைவல்லவர்
கந்திருவர், பெயரெனக்
கருதல்வேண்டும்.

## பூதகணம்

சாதகங், கிருத்திமம்
பூதகணமெனப்
குறள், கூளி, பாரிடம்
புகன்றனர்புலவர்.

பேய்

கழுது, சோகு
கடிகணம், மண்ணை
அலகை, கூளி
பிசாசு, வேதாளம்

பிரேதகம், சாவு
டிணங்குணபாசியென்று
இனையவீராறும்
பேயெனல்வேண்டும்.

ஆகாசம்

அந்தரம், ஆசினி
அம்பரம், மங்குல்
அண்டம், வானம்
ககனம், மீ, வெளி
விண், ஆகமாகும்

விசும்பு, தலையும்பர்
இடங்குடியொன்றாங்கு
இவைபதினேழும்
அடங்கவிலாகா
அப்பெயராகும்.

காற்று

வாதங், கூதிர்
வங்கூழ், கால், வளி
ஊதை, அனிலம்
கோதை, நீழல்
உலவை, மாருதம்
மருத்துப், புவனம்

வாடை, யொலியே
கூதை, யுயிர்ப்பே
வேற்றலங், கொண்டல்
கோடை, யென்றிருபதும்
காற்றின்பெயரெனக்
கருதல்வேண்டும்.

பனிக்காற்று

கூதிரும்ஊதையும்

குளிர்பனிக்காற்றே.

வடகாற்று

வாடை, வடந்தை

வடகாற்றாகும்.

மேல்காற்று

கோடை, மேல்காற்று.

## கீழ்காற்று

கொண்டல், கீழ்காற்று.

## தென்றல்

மந்தர், நிலமே
மலயக்காலே
தென்கால், வசந்தன்
தென்றலென்றிசைப்பர்.

## சுழல்காற்று

சூறை, சாரிகை
சுழன்றெழுகாற்றே.

## நெருப்பு

அழல், அங்காரகன்
அங்கி, கனலி
எரி, தழல், தபனன்
பாவகன், தீ, அனல்
செஞ்சுடர்ப்பகவன்
ஞெகிழி, உதாசனன்
உதவகன், தனஞ்சயன்
வசு, வெழு, நாவரி
தென்கீழ்த்திசையோன்
வன்னி, தேயுவென்று
இன்னவைபிறவும்
நெருப்பின்பெயரே.

## வடவாமுகாக்கினி

உத்தரமடங்கல்
ஊழித்தீயென
வைத்தகடையனல்
வடவாமுகமே.

## விளக்கு

தீபமுஞ்சுடரும்
விளக்கெனச்செப்புவர்.

## அனற்பொறி

புலிங்கம், அனற்பொறி.

## அனற்றிரள்

உற்கம், அனற்றிரள்.

### காட்டேரி

தாவம்,காட்டேரி.

### தீக்கடைகோல்

அரணி,ஞெலிகோல் தீக்கடைகோலே.

### தீக்கடவுள்

பாவகன்அத்தீக் கடவுள்பெயரே.

### நீர்

அறலும்புனலும் அயமும்அளகமும்
அப்பும்பாணியும் புவனமும்வனமும்
உலகமுங்கமலமும் கோவுங்கிலாலமும்
உகதமுங்கவந்தமும் காண்டமுந்தோயமும்
பயமுஞ்சலிலமும் நாரமுநீரே.

### வெள்ளநீர்

நீத்தம்,பிரளயம் வாரி,வெள்ளநீர்.

### புனற்கரசன்

மற்றப்புனற்கரசன் வருணனுகும்.

### அருக்கன்

வெய்யோன்,இருள்வலி பரிதி,செங்கதிர்
பதங்கன்,சூரியன் அலரி,பானு
சுடரவன்,தரணி வெஞ்சுடர்,கிரணன்
உதயன்,ஆதவன் பகலவன்,வேந்தன்
எல்லைமார்த்தாண்டன் ஆயிரங்கதிரோன்
தினகரன்,பனிப்பகை அழலவன்,திவாகரன்

இரவி, பார்க்கரன்
என்றாழ் அருணன்
ஆதித்தன், கனலி
ஞாயிறு, விரிச்சிகன்

சான்றோன், அரியே
தபனனென் றினையவும்
ஆன்ற அருக்கற்கு
அனந்தம்பெயரே.

சந்திரன்

அம்புலி, திங்கள்
குபேரன், அருச்சிகன்
நிசாகரன், இமகரன்
ஆலோன், களங்கன்
தண்சுடர்க்கலையோன்
இராக்கதிர், தானவன்

வியோமத்துடுபதி
அமுதகிரணன்
இந்து, சோமன்
பிறைமதி, சசிவிதுவென
வந்தனபிறவும்
நிலவுஞ்சந்திரன்.

செவ்வாய்

அங்காரகன், குசன்
ஆரல், வக்கிரன்
மங்கலன், அறிவன்
செந்தீவண்ணன்

பூமகன், நிலமகன்
குருதிசேய், செவ்வாய்
நாமமென்று
நவின்றனர்புலவர்.

புதன்

அருணன், தூதுவன்
அனுவழி, மேதை
மதிமகன், பாகன்
மாலவன், கணக்கன்
புந்தி, புலவன்

பண்டிதன், சௌமியன்
சிந்தை, கூரியோன்
அறிவன், புதனென
வந்தநாமம்
மற்றவற்காகும்.

வியாழம்

மந்திரி, ஆசான்
பீதகன், சுரகுரு

அந்தணன், அரசன்
ஆண்டளப்பான், பிரகற்பதி

சுந்தரப்பொன், குரு மறையோன் வியாழம்.

சுக்கிரன்

பளிங்கு, பார்க்கவன் ஒள்ளியோன், சுங்கன்
புகர், புயன், மழைக்கோள் அசுரமந்திரியென
விளங்குதிங்கள் வெள்ளி, சிதன், பிருகு
பிரசுரன், சல்லியன் சுக்கிரன் பெயரே.

சனி

மந்தன், காரி பங்கு, மேற்கோள்
கரியோன், முடவன் சௌரி, முதுமகன்
அந்தன், நீலன் சந்தில், சாவகன்
கதிர்மகன், கீழ்மகன் சனியின் பெயரே.

இராகு

இராகுக்கோள் கரும்பாம்பு.

கேது

கேதுக்கோள் செம்பாம்பு.

அனந்தன்

அனந்தன் பெயரே சேடனாகும்.

மேடவிராசி

வருடை, யுதடகர் விரியு மாட்டின் பெயர்
மறிமை, கொறியென மேடவிராசி.

இடபவிராசி

பாறல், புல்லம் ஏறு முதல் வந்தன
பாண்டில், பசுமூரி இடபவிராசி.

மிதுனம்

பாடவை, யாடவை
இரட்டை, சயமகள்
மேவுமியாழ்ப்பல்பெயர்
தண்டேமிதுனம்.

கர்க்கடகம்

அலவன், அள்ளி
குளிர்ஞெண்டார்மதி
கள்வன் என்றிவை
கர்க்கடகப்பெயரே.

சிங்கம்

அரிமா, புலியை
ஆனனம், யாளி
தெரியிற்புலிசீயப்
பல்பெயர்சிங்கம்.

கன்னி

பெண்மைப்பெயரே
கன்னிக்குமாகும்.

துலாம்

நிறையே, கட்டளை
வாணிகன், இறுப்பான்
துலையே, கோலெனத்
துலாப்பெயர்பெறுமே.

விருச்சிகம்

தெருக்கால், பறப்பன்
தேளே, விருச்சிகம்
நலமென்பெயரும்
தேளின்மேற்றே.

தனு

சாபங், காண்டபந்
தனுவின்பெயரே.

மகரம்

மானே, கலைசுறு
மகரப்பெயரே.

### கும்பம்

குடமே,சாடி பெயரேகும்பம்.

### மீனம்

மீனம்,மீனின் பல்பெயர்பெறுமே.

### அச்சுவினி

இரலையைப்,பிசியாழ் புரவி,மருத்துவநாள்
ஏறுதலையினுள் அச்சுவினியென்ப.

### பரணி

காடு,கிழவோன் தருமனுள்,போதமென
பூதம்,அடுப்பே பாகுபட்டது
தாழி,பெறுஞ்சோறு பரணிநாற்பெயரே.

### கார்த்திகை

அங்கி,ஆரல் நாவிதன்,வாணன்
அளக்கர்,அளகு தங்கொளி,அறுமீன்
பொங்கியநாடன் தழல்நாள்கார்த்திகை.

### உரோகிணி

பண்டி,பார்,சகடு ஒண்டிறல்,உருள்தேர்
சாகாடு,வையம் அயன்நாள்,உரோகிணி.

### மிருகசீரிடம்

மாழ்கு,பேராளன் மதிநாண்,மும்மீன்
மான்றலை; இந்திரன் பாலை,வெய்யோன்
மார்கழி,நரிப்புறம் மிருகசீரிடப்பெயர்.

### திருவாதிரை

மூதிரை, செங்கை, யாழ் ஆதிரை தன்பெயர்
ஈசர் தினமென ஆகுமென்ப.

### புனர்பூசம்

அதிதிநாள், மூங்கில் புனிதம், பிண்டி
கரும்பு, ஆவணம், பாலை புநர்தம், புனர்பூசம்.

### பூசம்

கொடிறு, காற்குளம் புணர்வதாகும்
சுரர்குருநாள், வண்டு பூசநாட்பெயரே.

### ஆயிலியம்

அரவினாள், கௌவை ஆயிலியப்பெயர்.

### மகம்

வேட்டுவன், கொடுநுகம் வாய்க்கால், பிதிர்நாள்
மெழுவாய் எழுஞ்சனி மாசி, மகமாகும்.

### பூரம்

இடையது எழுஞ்சனி பகவதிநாள், நாவிதன்
எலி, தூர்க்கை, கணை, பூரம்.

### உத்தரம்

பங்குனி, கடையது மானேறு, கதிர்நாள்
எழுஞ்சனி, பாற்குனி உத்திரமாகும்.

### அத்தம்

கைம்மீன், காமரம் நவ்வி, கன்னி
களிறு, கௌத்துவம் ஐவிரல், அத்தம்.

## சித்திரை

நெய்,வான்மீன்,சுவை
பயறு,நேர்வான்

செவ்வியின்,துவட்டாநாள்
சித்திரையென்ப.

## சோதி

விளக்கு,வீழ்க்கை
வெறுநுகம்,மரக்கால்

துளக்கம்,இலஙிலநாள்
சோதிநாளாகும்.

## விசாகம்

முறமே,முற்றில்
வைகாசி,அணிலநாள்

பெறுமேசுளகு
விசாகநாட்பெயரே.

## அனுடம்

பனைதேள்,பெண்ணை
புல்,தாளி,போந்தை

மித்திரநாளிவை
அனுடப்பெயரே.

## கேட்டை

துளங்கொளி,வல்லாரை
வேதி,எரி,தழல்

கிளந்தவிந்திரநாள்
பின்றுக்கேட்டை.

## மூலம்

கொக்கு,தேட்கடை
குருகு,வில்,அன்றில்

முற்றுமானி
அசரநாள்மூலம்.

## பூராடம்

உடைகுளம்,உற்குளம்

நீர்நாள்பூராடம்.

## உத்தராடம்

ஆடி,ஆனி
கடைக்குளம்,விச்சுவநாள்

நாடிலுத்திராட
நாளாகும்மே.

### திருவோணம்

நலத்தகுவைரம் உலக்கை,சோனை
நள்ளு,சிரவணம் மாயோன்நாள்,ஓணம்.

### அவிட்டம்

ஆவணி,காக்கை மேவிய அவிட்ட
பறவை,புள்,வசுநாள் மீனின்பெயரே.

### சதயம்

குன்று,பேரோ தங்குவருணனுள்
சுண்டன்,பெருஞ்செக்கு சதயநாளாகும்.

### பூரட்டாதி

புரட்டாதி,முற்கொழுங் உரைப்பர்நாழியும்
கால்,பூரட்டாதி அந்நாளுடனே.

### உத்திரட்டாதி

முரசு,பிற்கொழுங்கான் உரைசெய்யறிவனுள்
மன்னன்,இம்மூன்றினோடு உத்திரட்டாதி.

### இரேவதி

தொழுநாவாய் பஃறி,புருடநாள்
தோணி,சூலம் கடைமீன் இரேவதி.

### அருந்ததி

அருந்ததி,சாலி வடமீனாகும்.

### வான்மீன்

உடு,தாராகணம் ஒளிவான்மீனே.

### காலநுட்பம்

துடியுங்கலையும் தொடர்காலநுட்பம்.

### நாழிகை

கன்னலும்இருத்தையும் சொன்னவிகலையும்
கடிகையும்பதமும் நாழிகைத்தொல்பெயர்.

பொழுது

வேலையும் அமையமும் எல்லையுங்காலமும்
காலையும்பதமும் பொழுதெனப்படுமே.

முன்னைநாள்

நென்னலும்நெருநலும் முன்னைநாளாகும்.

பின்னைநாள்

பிற்றையும்பின்றையும் பின்னைநாளாகும்.

உச்சி

நண்பகல், உச்சி.

சந்தி

அந்தி, சந்தி

சாமம்

யாமம், சாமம்.

பகல்

எல், பகலாம்.

வெயில்

என்றூழ், ஆதபம் வெயிலெனப்படுமே.

சந்திரிகை

நிலவு, சந்திரிகை ஆகுமென்ப.

இரவு

எல்லியுங்கங்குலும் யாமினியுந்நிசியும்
யாமமும்வாலையும் எல்லுமிரவே.
அல்லும் அங்குலும்
இரசனியும் அல்கலும்

இருள்

நிசி, நத்தம் திமிரமுந்தமமும்
நீலமதனோடு இருளாகும்மே.

### நாள்

பகலும்வைகலும் ஆனியமும்திவாவும்
திவசமும்தினமும் நாளாகும்மே.

### அருணோதயம்

வைகறை,விடியல் புலரி,அருணோதயம்.

### திதி

திதி,பக்கம்.

### மாதம்

மதி, திங்கள் மாதமாகும்.

### முதற்பக்கம்

பக்கமுதலது நந்தையாகும்.

### இரண்டாமபக்கம்

பத்திரையென்பது இரண்டாம்பக்கம்.

### மூன்றும்பக்கம்

மூன்றேசயைபக்கம்

### நான்காம்பக்கம்

நான்கேயிரித்தை.

### ஐந்தாம்பக்கம்

ஐந்தாம்பக்கம் பூரணையாகும்.

### பாதிநாள்

அரைநாளும்பால்நாளும் அத்தநாளும்பாதிநாள்.

### மாத்திரை

கணமேமாத்திரை.

### நிகழ்காலம்

வேலையென்பது நிகழுங்காலம்.

வெப்பம்

உருப்பம்,வெப்பம் ஆகுமென்ப.

கோடை

வேனில்,கோடை மிசைப்போராகும்.

சிறுபோழுது

ஒல்லைசிறுவரை சிறுபொழுதாகும்.

அறுவகைப்பருவம்

கார்,கூதிர் பருவமவைதாம்
முன்பனி,பின்பனி ஆவணிமுதலா
சிசிரோ,வேனில் இரண்டிரண்டாக
முதுவேனில்என்றாங்கு மேவினதிங்கள்
இருமூன்றுவகைய எண்ணினர்கொளலே.

பனி

இமமும்துகினமும் பனியின்பெயரென
மஞ்சு,நீகாரமும் பகரப்படுமே.

கார்காலம்

காரெனுங்காலப் பெயர்சாற்காலம்.

கூதிர்காலமும் பனிக்காலமும்

கூதிர்காலமும் ஆகுமென்ப
குளிர்பனிக்காலமும் சிசிரநாளே.

பருவம்

ஆனியமும்இருதுவும் பருவமாகும்.

காலம்

பருவமும்யாண்டும் காலமாகும்.

யுகம்

ஊழியும்உறையுளும் உகமாகும்மே.

யுகமுடிவு

ஊழியும் அடங்கலும் உகமுடிவாகும்.

நான்முகன்வாழ்நாள்

நான்முகன்வாழ்நாள் கற்பமாகும்.

வாழ்நாள்

ஆயுள், ஆயுகம் வாழ்நாளென்ப.

மேல்

மேற்கு, வலமீ உம்பர் மேலாகும்.

கீழ்

கிழக்குக்கீழே.

வருடம்

துவலை, பெயலை உதகம், சிதறி
துளி, மாரி தூவல், சீகரம்
உறை, பெயலாலி தூறல், வருடம்.

மேகம்

மேகம், சீதம் எழிலி, கார், குயில்
விசும்பு, வான் கந்தரம், விண்டு
விண், முகில் மங்குண், மால், செல்
கொண்மூ; மஞ்சு கனமும்வரையார்.
கொண்டல், மை, மழை,

இடியேறு

உருமும்செல்லும் இடியும்வானேறும்
அசனியும்உருமேறும் இடியேற்றின்பெயரே.

மழைபெய்துவிடுதல்

தலையலென்பது மழைபெய்துவிடுதல்.

விடாதுசோரிதல்

சோனையும்பனித்தலும் விடாதுசொரிதல்.

பெருமழை

ஆசாரமென்பது பெருமழையாகும்.

துளி

துளி,பெயல்,ஆலி உறை,துளியாகும்.

ஆலங்கட்டி

ஆலி,ஆலம் கட்டியாகும்.

துவலை

சீகரம்,பிதிரோ தூவலென் றிவை
சிதாரி,சிகரம் துவலையாகும்.

மின்

தடித்துத்தடி,மின்.

இடி

இடிப்பெயர் இகுளே.

பரிவேடம்

ஊர்கோள்,வட்டம் பரிவேடப்பெயரே.

இந்திரவில்

வானவில்,இந்திர வில்லெனவறைவர்.

காமன்காண்டீபம்

காமன்காண்டீபம் கருப்புவில்லாகும்.

---

## திவாகரவரலாறு

வடமூற் கரசன் தென்றமிழ்க் கவிஞன்
கவியரங் கேற்றும் உபயகவிப் புலவன்
செறிகுணத் தம்பற் கிழவோன் சேந்தன்
அறிவு கரியாகத் தெரிசொற் றிவாகரத்துள்.

முற்றும்